

# பகவத் பாதை தமிழ் மாத இதழ்

ஒத்தது, ஒத்ததைக் குணமாக்கும் என்பது ஹோமியோபதி மருத்துவத்தின் அணுகுமுறை. நமக்கு என்னென்ன உபாதைகள் ஏற்படுகின்றனவோ அந்த உபாதைகளையே அந்த உபாதைகளைக் குணமாக்க வந்த மருத்துவராக - மருந்தாக ஏற்றுக்கொள்ளும்போது ஹோமியோபதி மருத்துவத்தின் அடிப்படைத் தத்துவமும் இங்கு வேலை செய்கிறது.

**– ஸ்ரீ பகவத்**

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

ஸ்ரீபகவத் ஐயா வழங்கிய ஞானத்தால் நாம் அனைவரும் பயன்பெற்று வருகிறோம்.

நாம் அனைவரும் ஒரே இடத்தில் ஒரே நேரத்தில் சந்திக்க வேண்டும் என்ற நோக்கத்திலும், தேடுதல் மிகுந்த புதிய உறுப்பினர்களை நம்மோடு இணைத்திடும் வகையிலும் மாபெரும் ஒருநாள் ஞானமுகாம் ஒன்றை சென்னை காமராஜர் அரங்கத்தில் ஏற்பாடு செய்துள்ளோம். இந்த முகாம் 2018 செப்டம்பர் 2 ஆம் தேதி காலை 9 மணி முதல் மாலை 5 மணிவரை நடைபெற இருக்கிறது. மதிய உணவு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

நீங்கள் அனைவரும் தவறாது இந்த முகாமில் கலந்து கொண்டு முகாமைச் சிறப்பிக்க வேண்டுகிறோம். ஒவ்வொருவரும் குறைந்த பட்சம் ஆர்வம் உள்ள இரண்டு அன்பர்களையாவது அழைத்து வர வேண்டுகிறோம். அதிகப் பொருட்செலவு ஆகும் என எதிர் பார்க்கிறோம். செலவுகளை எதிர்கொள்ள நன்கொடை வழங்கிய அன்பு உள்ளத்தினர்.

திரு. **TMK. தியாகராஜன்**, சென்னை - ரூ. 10,000/-
திரு. **சம்பந்தம் ஐயா - வடிவம்மாள் தம்பதியினர்,** அனைவரின் உணவுக்காக ஆகும் செலவுகள்
திரு. **சபாபதி,** சென்னை - ரூ. 5000/-
திரு. **ராம்லால்,** சென்னை - ரூ. 20,000/-
திரு. **சிவகுரு - உமா சிவகுரு** தம்பதியினர், சென்னை - ரூ. 6000/-
திருமதி **பொற்செல்வி,** சென்னை - ரூ. 2000/-
திரு. **S. கணேஷ்,** சென்னை - ரூ. 25000/-
திரு. **நாகராஜன்,** மேற்கு மாம்பலம், சென்னை - ரூ. 1000/-

மேலும் அரங்கில் உதவி செய்ய 50 நிர்வாகிகள் தேவைப்படுகிறார்கள்.

முகாம் பற்றிய தகவலை தேடுதல் உள்ள புதிய அன்பர்களுக்கும் நாம் கொண்டு செல்ல வேண்டும்.

மொத்தம் 1500 இருக்கைகள் உள்ளன. இருக்கை ஒன்றுக்கான பதிவுக் கட்டணம் ரூ. 250 என நிர்ணயம் செய்துள்ளோம்.

பெரும்பான்மையோர் பங்கேற்று அரங்கம் நிறைந்த நிகழ்ச்சியாக சிறப்பிக்க வேண்டுகிறோம்.

விளம்பரம், இருக்கைப் பதிவு மற்றும் அழைப்பிதழ் விநியோகம் சம்பந்தமாக 500 ஆர்வலர்கள் தேவைப்படுகிறார்கள்.

இது சம்பந்தமான உங்கள் ஆலோசனைகளையும் உங்கள் பங்களிப்பு விபரங்களையும் உடனடியாகத் தெரிவித்து உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

இத்தகவலை நண்பர்களுக்கும் தெரிவிக்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் அன்பிற்கினிய சென்னை அன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள். நடைபெற இருக்கும் மாபெரும் ஒருநாள் ஞான முகாம் சிறப்பாக நடைபெற சென்னையில் செயல்பட்டு வரும் திரு. **இரவிச்சந்திரன் ஐயா** (09444402986) மற்றும் திரு. **தியாகராஜன் ஐயா** (09381019473) அவர்களோடு தொடர்பு கொண்டு ஒத்துழைப்பு வழங்குமாறும் புதிய அன்பர்கள் பலரையும் ஞானமுகாமில் கலந்து கொள்ள செய்து உதவுமாறும் பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.



அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன், 97891 65555, 99942 05880, 94432 90559, 94444 02986, 93810 19473**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# யோக சிகிச்சை – 4



- ஸ்ரீ பகவத்

யோக சிகிச்சை 1,2,3 ஆகியவற்றோடு இணைத்து இந்தக் கட்டுரையையும் படித்திட வேண்டுகிறேன்.

நீங்கள் எந்த நோயும் இல்லாமல் ஆரோக்கியமாக இருப்பதாக வைத்துக் கொள்வோம்.

சும்மா சாப்பிட்டுப் பாருங்கள் என்று கூறி உங்களுக்கு ஒருவர் ஒரு ஹோமியோ மருந்தைக் கொடுக்கிறார் என வைத்துக் கொள்வோம்.

நீங்களும் அந்த மருந்தை உட்கொள்கிறீர்கள்.

அதை உட்கொண்ட சிறிது நேரத்தில் உங்களுக்கு தலை சுற்றலும் வாந்தியும் ஏற்படுகிறது.

நீங்கள் சாப்பிட்ட அந்த ஹோமியோ மருந்து தான் உங்களுக்கு இந்த தலைச் சுற்றலையும், வாந்தியையும் ஏற்படுத்தியுள்ளது.

அந்த மருந்தை உங்களுக்கு மட்டுமல்ல, எவருக்குக் கொடுத்தாலும் இதே போன்று தலைச் சுற்றலையும், வாந்தியையும் தான் ஏற்படுத்தி விடும்.

அது தான் அந்தக் குறிப்பிட்ட மருந்தின் குணம்.

அந்த மருந்தையே சாப்பிடாத ஒருவருக்கு தலைச் சுற்றலும், வாந்தியும் இருப்பதாக வைத்துக் கொள்வோம். வேறு ஏதோ காரணங்களினால் அந்த உபாதை அவருக்கு ஏற்பட்டுள்ளது.

அவருக்கு அந்த ஹோமியோ மருந்தைக் கொடுத்தால் என்ன ஆகும்?

ஏற்கனவே இருந்து கொண்டிருக்கும் தலைச் சுற்றலையும் வாந்தியையும் இன்னும் கொஞ்சம் அதிகப்படுத்தி விடுமா?

அது அப்படிச் செய்யாமல், ஏற்கனவே இருந்த தலைச் சுற்றலையும், வாந்தியையும் சமன் செய்து குணப்படுத்தி விடுகிறது.

"ஒத்தது, ஒத்ததைக் குணமாக்கும்" என்பது ஹோமியோ மருத்துவத்தின் அணுகுமுறை.

நமது அணுகுமுறையிலும் ஓரளவு இது தான் நடந்துள்ளது.

நமக்கு என்னென்ன உபாதைகள் ஏற்படுகின்றனவோ

அந்த உபாதைகளையே அந்த உபாதைகளைக் குணமாக்க வந்த மருத்துவராக-மருந்தாக நாம் ஏற்றுக் கொள்கிறோம்.

ஆகவே ஹோமியோ மருத்துவத்தின் அடிப்படைத் தத்துவமும் இங்கு வேலை செய்திருக்கிறது.

நாம் தனியே மருந்துகளை எடுக்கும் போது, உடலுக்கு இயற்கையாக இருக்கும் அறிவு தடுமாற்றமடைந்து விடுகிறது. உடலே உடலைச் சரி செய்வதிலும் பிரச்சினை ஏற்பட்டு விடுகிறது.

வழக்கமாக எனக்கு முதுகில் பிடித்துக் கொள்வதுண்டு. நிமிர்ந்து நடக்க முடியாது. அனைவருக்கும் தலை வணங்கியபடியே தான் நடக்க வேண்டியது ஏற்படும்.

தானாகச் சரியாகி விடாதா!, இயற்கை முறையில் சரியாகி விடாதா! என்று இரண்டு மூன்று நாட்கள் பொறுத்திருந்து பார்ப்பேன். கடைசியில் டாக்டரிடம் சென்று ஊசி போட்டுக் கொண்ட பிறகு தான் குனிந்த முதுகு நேராகும்.

நாலைந்து மாதங்களுக்கு இது போன்ற பிரச்சினை ஏற்படாது. அதன் பிறகு ஏதாவது ஒரு பொருளைக் குனிந்து எடுத்தோமானால் மீண்டும் இவ்வாறு முதுகு பிடித்துக் கொள்ளும்.

வர்ம வைத்தியர் ஒருவர் மசாஜ் செய்வார். அவரிடம் வாடிக்கையாக மசாஜ் செய்து கொள்வேன். அப்படி மசாஜ் செய்யும் காலத்தில் இவ்வாறு முதுகு பிடித்துக் கொள்வதில்லை.

அந்த வைத்தியர் திடீரென மாரடைப்பினால் காலமாகி விட்டார். அதன் பிறகு மசாஜ் செய்து கொள்வதும் நின்று போய் விட்டது.

இதனால் மீண்டும் முதுகு பிடித்துக் கொள்வதும், ஊசி போட்டு சரி செய்வதுமாக இருந்தேன்.

உடலே உடலை சரி செய்து கொள்கிறது என்ற அணுகுமுறைக்கு வந்த பிறகு ஒரு முறை இவ்வாறு பிடித்துக் கொண்டது. அதை அந்த அணுகுமுறை மூலமாகவே எதிர்கொண்டேன்.

அவ்வாறு முதுகு பிடித்துக் கொண்டதையே உதவிகரமாக எடுத்துக் கொண்டேன்.

ஊசி போட்டுக் கொண்டால் எவ்வளவு நேரத்தில் பலன் கிடைக்குமோ அதே கால

அவகாசத்தில் எனது முதுகுப்பிடிப்பு சரியாகி விட்டது.

அன்று என்னிடம் விடை பெற்றுக் கொண்ட அந்த முதுகுப்பிடிப்பு ஐந்து வருடங்களாகத் திருப்பி வரவில்லை.

தற்போது சில மாதங்களுக்கு முன்னால் நமது இருப்பிடத்துக்கு வர்ம வைத்தியர் ஒருவர் வந்திருந்தார்.

அவர் சிறிய அளவில் எனக்கு மசாஜ் செய்தார். நரம்புகளை நீவி விட்டார். மூட்டுகளின் பிடிப்பை சீரமைத்தார். மசாஜ் செய்து விட்டு அவர் அவருடைய ஊருக்குப் போய் விட்டார்.

அவர் போன இரண்டு வாரங்களுக்குப் பிறகு

பல வருடங்களாகக் காணாமற் போயிருந்த முதுகுப்பிடிப்பு மீண்டும் வந்து என்னைப் பிடித்துக் கொண்டது.

அந்தப் பிடிப்பை, உதவி செய்ய வந்ததாக மீண்டும் எடுத்துக் கொண்டேன். மீண்டும் அது என்னை விட்டுப் போய் விட்டது.

ஒரு முறை ஓர் அம்மையார் இது சம்பந்தமான ஒரு கேள்வியை எழுப்பினார்.

'உடலே தன்னைத் தானே சரி செய்து கொள்கிறது என்றால், அது குழந்தைகளிடம் செயல்பட்டது போல் தெரியவில்லையே'.

இந்த அணுகுமுறையைப் பின்பற்றும் பெண் பல் மருத்துவர் ஒருவர் தனது குழந்தையைப் பற்றி இவ்வாறு கூறினார்.

"பெரியவர்களை விட குழந்தைகளுக்குதான் இந்த அணுகுமுறை சுலபமாக வேலை செய்கிறது. அம்மா கூறுவதை குழந்தை வேத வாக்காக எடுத்துக் கொள்கிறது. ஆகவே, குழந்தைக்கும் வேலை செய்கிறது".

உடல் இயற்கையாகவே தன்னைத் தானே குணமாக்கிக் கொள்கிறது என்றால்

அது எந்த அளவில் உண்மை?

நோயுற்ற குழந்தைகளுக்கு மருத்துவம் பார்க்காமல் விட்டு விட்டால் இயற்கையாகவே குணமாகி விடுமா?

நோயுற்ற மிருகங்கள் எந்த மருந்தையும் எடுத்துக் கொள்வதில்லை.

அவை நோயிலிருந்து விடுபட்டு விடுகின்றனவா?

குழந்தைகளுக்கு இது வேலை செய்யவில்லை என்று ஏன் அந்த அம்மையார் கூறினார்?

குழந்தைகளோ, விலங்குகளோ தங்களுக்கு வந்த உபாதைகளை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளத் தெரிந்திருக்கவில்லை. அந்த உபாதைகளிலிருந்து விடுபடவே அவை விரும்புகின்றன.

ஆகவே குழந்தைகள் இந்த அணுகுமுறைக்கு எதிராகவே செயல்படுகின்றன. அதனால் அவர்களுக்கு இது வேலை செய்யவில்லை.

இதே அணுகுமுறையிலிருக்கும் மருத்துவர் ஒருவருடைய ஒன்றரை வயது குழந்தை இறந்து போய் விட்டது.

இந்த அணுகுமுறையை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளும் பக்குவம் அடைந்தவர்களுக்கு மட்டுமே இந்த அணுகுமுறை நன்கு வேலை செய்கிறது.

இந்த அணுகுமுறையை ஏற்றுக் கொள்ள முடியாத குழந்தைகளுக்கு மற்ற மருத்துவத்தைப் பின்பற்றுவதே சரியானதாகும்.

மனதளவில் புரிந்து கொள்ளக் கூடியவர்களுக்கு தாராளமாக இந்த அணுகுமுறையைப் பரிந்துரைக்கலாம்.

எவருக்கெல்லாம் நாம் இந்த அணுகுமுறையை எடுத்துக் கூறினோமோ அவர்களெல்லாம் இதனால் பலனடைந்து அந்த விபரத்தையும் வெளிப்படுத்தியுள்ளார்கள்.

முப்பது ஆண்டுகளாகப் போராடி வந்த மாதவிடாய்ப் பிரச்சினை ஒரு பெண்மணிக்கு ஒரே நாளில் தீர்வடைந்து விட்டது.

'உபாதைகளை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளுங்கள்' என்ற அணுகுமுறையைப் பலர் ஏற்றுக் கொண்டு அவர்களது பிரச்சினைகளிலிருந்து வெளியே வந்து விட்டனர்.

அவர்களில் பலர் தங்கள் பிரச்சினை என்ன என்று கூடத் தெளிவாகக் கூறுவதில்லை. ஆனாலுங்கூட நமது அணுகுமுறையைப் புரிந்து கொண்டு தீர்வு பெற்றுள்ளனர்.

அன்பர் ஒருவர் புது வகையான பிரச்சினை ஒன்றை முன் வைத்துத் தீர்வு கேட்டார்.

"எனது காது கேட்கும் திறன் சிறிது சிறிதாகக் குறைந்து வருகிறது. முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக நான் என்ன செய்வது?"

இவருக்கு என்ன தீர்வு கொடுப்பது?

இந்த அணுகுமுறையை எனக்கு அறிமுகம் செய்தவர்கள் இது குறித்து என்ன கூறுகிறார்கள்?

"பசிக்கும் போது மட்டும் உணவு எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும், தாகம் எடுக்கும் போது மட்டும் நீர் அருந்த வேண்டும்" என்றும் கூறுகிறார்கள்.

ஒரு முறை இப்படி சாப்பிடாமல் இருந்து பார்த்தேன். உடல் சோர்வு தான் ஏற்பட்டதே தவிர, இரண்டு நாட்களாகியும் பசியே எடுக்கவில்லை. பிறகு அந்த முயற்சியைக் கை விட்டுவிட்டேன்.

சில மாதங்களுக்கு முன்னால் மதுரையைச் சேர்ந்த ஒருவர் இவ்வாறு முயன்றதால் தனது ஆரோக்கியம் பாதிப்படைந்து விட்டதாகக் கூறினார்.

ஒவ்வொரு வேளை உணவையும் அளவோடு உண்பது மட்டும் போதுமானது என்பது எனது தனிப்பட்ட கருத்தாகும்.

அந்த அன்பருக்கு என்ன பதில் கூறுவது? காது கேட்கும் திறன் சம்பந்தப்பட்ட நமது பதில் என்ன?

'உடலில் அவருக்கு வேறு பிரச்சினைகள் உண்டா, அவர் மருந்து ஏதாவது எடுத்துக் கொண்டிருக்கிறாரா?" என அவரை விசாரித்தேன்.

வேறு பிரச்சினைகள் எதுவும் இல்லை என்றும், மருந்து எதனையும் எடுக்கவில்லை என்றும் கூறினார்.

நமது உடல் இந்தப் பிரச்சினையை எவ்வாறு தீர்வு செய்யப் போகிறது?

உங்கள் உடலில் ஏதாவது ஒரு பகுதியில் வலியோ, வீக்கமோ, புண்களோ எந்தக் காரணமும் இல்லாமல் தோன்றினால் அது சம்பந்தமாக எந்த நடவடிக்கையும் எடுக்காதீர்கள். அவை உங்கள் காது சம்பந்தப்பட்ட பிரச்சினையைத் தீர்வு செய்ய வந்தவையாகவே எடுத்துக் கொள்ளுங்கள் என்று அவருக்கு ஆலோசனை வழங்கினேன்.

உடலை இயற்கையாகச் செயல்பட விடுங்கள். அவசரப்பட்டு மருந்துகள் எவற்றையும் எடுத்து விடாதீர்கள் என்று அவரைக் கேட்டுக் கொண்டேன்.

ஒரு மாதத்துக்குப் பிறகு சென்னையில் அவர் என்னை சந்தித்தார்.

மலர் மருந்துகளைப் பற்றி பேசிக் கொண்டிருந்தார். ஏதோ ஒரு மருந்தை அவர் எடுத்து வருவதாகவும் கூறிக் கொண்டிருந்தார்.

நமது அணுகுமுறையைப் பொறுத்த அளவில், நான் இன்னும் ஒரு மாணவனாகத்தான் இருந்து கற்றுக் கொண்டிருக்கிறேன்.

எப்படியெல்லாம் இந்த அணுகுமுறை எனக்கு பயன்பட்டுள்ளது. அப்படி அது எனக்குப் பயன்படும் வகையில் அந்த அணுகுமுறையை நான் எவ்வாறு எடுத்துக் கொண்டுள்ளேன் என்பதை மட்டுமே நான் மற்றவர்களோடு பகிர்ந்து வருகிறேன்.

என்னைப் பொறுத்த அளவில் எனது பிரச்சினைகள் யாவும் நூறு சதவீதம் தீர்வு பெற்று வருகின்றன.

எனது அணுகுமுறையைப் பின்பற்றிய அனைவரும் தீர்வு கண்டதாகவே கூறுகிறார்கள்.

ஆன்மிக உலகத்தைப் பொறுத்த அளவில், மாஸ்டர் எனும் தகுதியை நான் அங்கீகரித்துக் கொண்டு விட்டேன்.

ஆனால் யோக சிகிச்சையைப் பொறுத்த அளவில் மாஸ்டர் என்னும் தகுதிக்கு நான் இது வரை வந்திருக்கவில்லை.

அதுவரை எனது கருத்துகளை, ஒரு சக மாணவனுடைய ஆலோசனையாக மட்டுமே ஏற்றுக் கொள்ள வேண்டும்.

உங்களது சிறிய பிரச்சினைகளுக்கு இதனைப் பயன்படுத்தி, அது பயன்படுவதாக இருந்தால் மட்டும் பெரிய பிரச்சினைகளுக்கும் இதனை எடுத்துப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுகிறேன்.



# கவலைகள் அனைத்திற்கும் தீர்வு - புதிய பதிப்பு



இன்பங்கள் ஒருவனைப் பித்தனாக்கும்.
துன்பங்கள் ஒருவனைப் புத்தனாக்கும்.

அனைத்து அன்பு உள்ளங்களுக்கும் எங்கள் அன்பான வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்களில் பிரதான நூலான **கவலைகள் அனைத்திற்கும் தீர்வு** என்ற நமது நூல் உங்கள் அனைவரது ஆதரவுடன் பரிசளிப்பு விலையாக ரூ.**50**/-க்கு ஆங்கிலத்திலும், தமிழிலும் வெளியிட்டு வருகிறோம். இதற்கு 24 அன்பு உள்ளத்தினர் தலா ரூ. **10,000/-** வழங்கியிருந்தனர்.

அதன் காரணமாக பல்வேறு நபர்களுக்கு நமது கருத்துகளை வழங்கி உதவ முடிந்தது.

நாம் தமிழில் அச்சிட்ட இந்த நூல்கள் மட்டும் தீர்ந்து விடும் நிலையில் உள்ளது. இந்த நூலை நாம் மீண்டும் அச்சிட வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இதற்கு ரூ. **10,000/-** வழங்கும் **25** அன்பு உள்ளத்தினர் மட்டும் தேவைப்படுகிறார்கள் என வேண்டுகோள் விடுத்திருந்த நிலையில் இதுவரை ரூ. 10000 வழங்கிய அன்பு உள்ளத்தினர் :

திரு. **சங்கரநாராயணன்,** கும்பகோணம், திரு. **ஜெயராம்,** கனடா, **அக்கு ஹீலர் முத்துகுமார்,** அக்கு பஞ்சர் மையம், மேற்கு மாம்பலம் திரு. **ஸ்ரீ சதானந்தம்,** திருச்செங்கோடு, திருமதி. **பிரபா முரளி,** சென்னை, திரு. **இராஜகோபால்,** பரமத்திவேலூர், திரு. **விஷ்ணுகுமார்,** பெங்களூர், திருமதி. **வாசுகி செல்வராஜ்,** UK, திரு. **வேலுபிள்ளை பாலேந்திரன்,** UK, இவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் 16 நன்கொடையாளர்கள் தேவைப்படுகிறார்கள்.

இந்தப் பரிசளிப்பில் பங்கேற்க விரும்பும் அன்பு உள்ளங்கள் கீழ்கண்ட வங்கி கணக்கில் செலுத்தி 97891 65555 என்ற எண்ணிற்கு தகவல் தெரிவிக்கவேண்டுகிறோம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 1507620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம்.

அன்புடன் **ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம். செல் : 99942 05880, 97891 65555



**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

# ? கேள்வி? பதில்...

## தற்கொலை எண்ணத்திலிருந்து மீள முடியுமா?

**கேள்வி :** ஐயா, நான் அடிக்கடி மன உளைச்சலாலும் மன அழுத்தத்தாலும் பாதிக்கப்படுகிறேன். நான் எதற்கும் சரியில்லை என்ற எண்ணம் எனக்குள் எப்போதும் இருந்து கொண்டே இருக்கிறது. இதனால் வாழ்வதே வீண் என்று தற்கொலை எண்ணம் எனக்கு தொடர்ந்து வந்து கொண்டே இருக்கிறது. இதிலிருந்து எப்படி மீள்வது?

**பதில்:** தான் சரியில்லை என்றும், எதற்கும் பிரியோஜனம் இல்லை என்றும் தன்னை நினைத்துக் கொண்டு தொடர்ந்து தற்கொலை எண்ணத்தில் இருந்து வந்த ஒரு பெண்மணி, பகவத் ஐயாவின் கருத்துகளை புரிந்து கொண்டு எப்படி இதிலிருந்து விடுபட்டு நல்ல நிலைக்கு திரும்பினார் என்பதை அவருடைய அனுமதியுடன் உங்களுடன் பகிர்ந்துகொள்கிறேன். அந்த பெண்மணி தன்னை பற்றி கூறியது:

“ஐயா, எனக்கு திருமணமாகி அன்பான கணவருடன், இரண்டு பெண் குழந்தைகள், மற்றும் கை குழந்தையாக ஓர் ஆண் குழந்தையுடன் வாழ்ந்து வருகிறேன். திருமணத்திற்கு முன்பே என்னுடைய சிறு வயதிலேயே எனது தாயார் இறந்து விட்டார். சித்தியின் வளர்ப்பில் தான் வளர்ந்தேன். சித்தியுடன் எனக்கு அன்யோனியமான உறவு கிடையாது. அதே போல் திருமணமாகி போன புகுந்த வீட்டிலும் எனது, மாமனார், மாமியார் ஆகியோரிடமும் இணக்கமான உறவு இல்லை. நான் பிறந்த வீட்டிலும் சரி, நான் புகுந்த வீட்டிலும் சரி என்னை ‘நீ எதற்கும் லாக்கியில்லை’ என்று கூறுவார்கள். இப்படியே கிட்டத்தட்ட ஓர் ஏழு ஆண்டுகளாக ‘நான் எதற்கும் பிரயோஜனம் இல்லை’ என்பதை கேட்டு தான் வாழ்ந்து வருகிறேன்...

“இப்படி தொடர்ந்து பிறந்த வீடு, புகுந்த வீடு என இரண்டு பக்கமும் கேட்டதினால் ‘நான் சரியில்லை, நான் எதற்கும் பிரயோஜனம் இல்லை’ என்று என்னை நானே எண்ணிக் கொள்வேன். ‘என்னை தவிர மற்றவர்கள் எல்லாம் சரியாக இருக்கிறார்கள். ஆனால் நான் எதற்கும் உபயோகமில்லை. என்னால் எதுவும் முடியாது. நான் இருப்பதே வீண் என்று எண்ணிக் கொள்வேன். ‘நான் வாழ்வதற்கு கூட தகுதி அற்றவள்’ என்று சதா எண்ணிக் கொள்வேன். எனக்கு முதுகுவலி இருந்தது. இதனால் என்னால் எந்த வேலையும் செய்ய முடியவில்லை. எனக்கு, என் பிள்ளைகளுக்கு, வீட்டு வேலைகள் என எதையும் செய்ய முடியாத நிலைக்கு சென்றுவிட்டேன்...

“பிள்ளைகள், கணவர் எதாவது என்னிடம் கேட்டால் அவர்கள் மீது எரிந்துவிழுவேன். மற்றவர்கள் 10 நிமிடத்தில் செய்து முடிக்கும் வேலைக்கு எனக்கு 1 மணி நேரம் கூட பத்தாத நிலையில் இருந்தேன். மனதில் சதா எப்போதும் "நாம் எதற்கும் உபயோகமில்லை, நம்மால் முடியாது, நாம் சரியில்லை என்று இடைவிடாது எண்ணிக் கொண்டே இருப்பேன்...

“நான் செய்த வேலையை கணவரோ அல்லது வேறு யாராவது பாராட்டினாலும் கூட ‘நான் சரியாக செய்யவில்லை. இன்னும் நன்றாக செய்திருக்க வேண்டும் மற்றவர்கள் போல் நான் நன்றாக செய்யவில்லை’ என்றே எண்ணிக் கொள்வேன்...

இப்படி சதா மனதில் தொடர்ந்து எண்ணிக் கொண்டு இருப்பதினால் எனக்கு தூக்கம் என்பது இல்லாமல் போனது. எதிலும் ஒரு நிறைவு ஏற்படுவதில்லை. சிரித்தே பல வருடங்கள் ஆகின்றன. நாம் வாழ்வதே வீண் என்று எண்ணுவதால் தற்கொலை செய்து கொள்ளலாம் என்ற எண்ணம் தொடர்ந்து வந்து கொண்டே இருந்தது. எனது பிள்ளைகளின் முகம் பார்க்கும் போது நான் இறந்துவிட்டால் அவர்கள் கதி என்னவாகும் என்று எண்ணிக் கொண்டு எனக்குள் மிகுந்த கவலையுடன் இருந்து கொண்டு இருப்பேன்.”

இந்த நிலையில் தான் அந்த பெண்மணியின் அண்ணார் என்னிடம் “நீங்கள் கொஞ்சம் பேசி முயற்சி செய்து பாருங்கள். ஆனால் பகவத் ஐயாவின் கருத்துகள் எதுவும் என் தங்கைக்கு தெரியாது" என்று கூறினார்.

அன்று இரவு 9.00 மணிக்கு பேச ஆரம்பித்தேன். தன்னுடைய பிரச்சினையை சொல்லவே மிகுந்த தயக்கத்துடன் மெது, மெதுவாக ஒவ்வொரு வார்த்தைகளாக அரை மணி நேரமாக சொன்னார் அந்த பெண்மணி. அவரின் வார்த்தைகள் ஏதோ பெரிய பள்ளத்திலிருந்து வருவது போலவும் மிகவும் மெதுவாக பேசுவது போலவும் இருந்தது. அவரது பிரச்சினை என்ன என்பதை புரிந்து கொள்ளவே ஒரு மணி நேரம் தேவைப்பட்டது.

பிறகு அந்த பெண்மணியிடம் "நீங்களே சரியில்லையா? அல்லது நீங்கள் செய்த வேலைகள் சரியில்லை என்பதால் மற்றவர்கள் நீங்கள் சரியில்லை என்று கூறுகிறார்களா?" என்று கேட்டேன். “நான் செய்த வேலை சரியில்லை என்பதால்தான் என்னை சரியில்லை என்று கூறுகிறார்கள்” என்று கூறினார். பொதுவாக மற்றவர்கள் உங்களை, “நீங்கள்

சரியில்லை என்று கூறுவது வருத்தத்தை ஏற்படுத்துகிறதா? நீங்கள் சரியில்லை என்று நீங்களே எண்ணிக்கொள்வது வருத்தத்தை ஏற்படுத்துகிறதா?” என்று கேட்டேன்."

"மற்றவர்கள் என்னை சரியில்லை என்று கூறுவது என்னை பாதித்தாலும், நானே என்னை சரியில்லை என்று எண்ணிக்கொள்வது தான் ஒவ்வொரு நிமிடமும் வாட்டி வதைக்கிறது" என்றார் பெண்மணி.

"நீங்களே சரியில்லையா? நீங்கள் செய்யும் வேலை சரியில்லையா? வேலையை சரியாக செய்தால் நீங்கள் சரியாகிவிடுவீர்கள் தானே? உங்களுடைய வேலையை சரியாக செய்வதற்கு என்ன செய்ய வேண்டுமோ அதை செய்யுங்கள். நீங்கள் சரியில்லை என்று நீங்களே முடிவு செய்து விட்டால் உங்களால் எப்படி முதலில் வேலையை செய்ய முடியும். உங்களையும் நீங்கள் செய்ய வேண்டிய வேலையையும் வேறுபடுத்தி புரிந்து கொள்ளுங்கள். உங்களுடைய வேலையை சரியாக செய்வதன் மூலம் நீங்கள் சரியாகி, சரியான நபராக மாறிவிடுவீர்கள்” என்றேன்.

“நீங்கள் காலையிலிருந்து நூறு வேலைகள் செய்வதாக வைத்துக் கொள்வோம். நூறு வேலைகளையும் சரியாக செய்யவில்லையா? ஒரு ஐம்பது வேலைகள் சரியாகவும் மீதம் உள்ள ஐம்பது வேலைகள் சரியாக செய்யாமலும் இருக்கிறீர்களா?" என்றேன்.

“ஒரு பாதி வேலையை எப்படியோ செய்து விடுகிறேன். ஆனாலும் நிறைவாக செய்யவில்லை என்று தோன்றுகிறது. இதுபோக மீதி பாதி வேலையை என்னால் செய்ய முடியவில்லை. அதற்கு தேவையான சக்தியும் என்னிடம் இல்லை” என்றார் பெண்மணி.

“நீங்கள் உங்களை சரியில்லை என்று எண்ணிக் கொள்வதாலே பாதி வேலை செய்தும் மனதில் நிறைவு இல்லாமல் இருக்கிறீர்கள். நீங்கள் புரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால் உங்களை ஒருபோதும் தவறாக எண்ணிக் கொள்ளவே தேவையில்லை என்பதுதான். உங்களுடைய செயலில்தான் மாற்றம் வேண்டும்" என்று பகவத் ஐயாவின் அகம், புறம் என்பதை அந்த பெண்மணிக்கு புரியும் வகையில் உதாரணத்துடன் எடுத்துக் கூறினேன்.

கிட்டத்தட்ட ஒரு மணிநேரத்திற்கு பிறகு வார்த்தைகள் கொஞ்சம் தெளிவாகவும், இடை இடையே சிரிப்பும் வந்தது அந்த பெண்மணிக்கு.

நான், “நீங்கள் சிரித்துக் கொண்டு இருக்கிறீர்களா!” என்றேன். “ஆமாம்” என்று கூறிவிட்டு பல நாட்களுக்கு பிறகு இப்போதுதான் சிரிப்பு வருகிறது” என்றார். அவரது சிரிப்பு அவர் ஓரளவு புரிந்துகொண்டார் என்பதை உறுதிப்படுத்தியது.

“நீங்கள் மாற்ற வேண்டியது உங்களை அல்ல, உங்களுடைய வேலையை சரியாக செய்யத் தொடங்கினால் போதும். உங்களுடைய வேலைகளை ஒரு டைரியில் குறித்துக் கொள்ளுங்கள். சரியாக செய்ய முடியாத 50 வேலைகளை கொஞ்சம், கொஞ்சமாக 40, 30, 20 என குறைத்து சரியாக செய்யத் தொடங்குங்கள். உங்களை யாரும் சரியில்லை என்று கூறினால் அதன் பொருள் நீங்கள் செய்த வேலையை தான் குறிக்கிறதே தவிர உங்களை ஒருபோதும் குறிக்கவில்லை" என்பதை புரிய வைத்தேன்.

தொடர்ந்து தினமும் ஒரு 5 நிமிடங்கள் என்னுடன் பேசி வருமாறு கேட்டுக்கொண்டேன். அடுத்தடுத்த நாட்களில் மிக பெரிய மாற்றம் ஏற்படத் தொடங்கியது. பேச்சில் ஒரு தெளிவும், சிரிப்பும், ஏற்பட்டது. என்னென்ன வேலை செய்ய வேண்டும் என்பதை ஒரு டைரியில் குறித்துக் கொண்டு அந்த வேலையை சிறப்பாக செய்யும் நிலைக்கு ஒரே வாரத்தில் வந்துவிட்டார். அந்த பெண்மணியின் கணவரோ, குழந்தைகளோ ஏதாவது கேட்டால் எரிந்து விழுபவர், தற்போது அவர்களை பார்த்துக் கொள்ளவேண்டியது தன்னுடைய கடமை என்று உணர்ந்து மன நிறைவாக செயல்படும் தன்மைக்கு வந்துவிட்டார்.

பகவத் ஐயாவின் அகம், புறம் என்பதை நன்றாக புரிந்து கொண்டால் போதும் ஒட்டு மொத்த பிரச்சினையிலிருந்து விடுபடலாம். அகத்தில் நாம் செய்வதற்கு எதுவுமே இல்லை என்ற புரிதல் தெரியாததால் அகத்தில் நம்மை நாம் சரியில்லை என்று முத்திரை குத்திக்கொள்வதால் நம்முடைய ஒட்டு மொத்த செயல்களும் முடிங்கிபோய்விடுகின்றன. நாம் எதற்கும் பிரயோஜனம் இல்லை என்று திரும்ப, திரும்ப நம்மை நாமே சரியில்லை என்று சிறைபடுத்தி கொள்வதால் வாழ்வதே வீண் என்று தற்கொலை செய்து கொள்ளும் அளவிற்கு சென்று விடுகிறோம்.

அகத்தில் நாம் செய்வதற்கு எதுவும் இல்லை என்பதும் நம்மை நாமே சரிசெய்யத் தேவையில்லை என்பதும் ஒன்றே. நம்மை சரிசெய்வதிலிருந்து நாம் விடுபடும் போது தான் நாம் செய்ய வேண்டிய வேலைகளே நமக்கு தெளிவாக தெரிகின்றன. இந்த புரிதலுக்கு பிறகு நமது செயல்கள் ஒழுங்குபடுகின்றன. நம்மை பிடித்துக்கொண்டு ஆட்டுவிக்கும் ஒட்டு மொத்த பிரச்சினைகளின் பிடியிலிருந்து நாம் சுதந்திரமடைகிறோம். மிக சிறந்த செயல் வீரர்களாக நாம் மாற்றமடைகின்றோம். நமது அகத்தைநோக்கி இருந்த கவனம் இப்போது நமது செயலின் பக்கம் திரும்புகிறது.

**"பகவத் ஐயாவின் புரிதல் ஒன்றே மனித குலத்தின் ஒட்டு மொத்த பிரச்சினைக்கும் தீர்வு."**

# ஆசிரியர் பகுதி

**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555



பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

ஞானம், முக்தி என்பதெல்லாம் ஆன்மிகம் சம்பந்தப்பட்டதாகவும், அவ்வளவு எளிதில் அடைய முடியாததாகவும் பலரும் கருதுவதால், ஞானம் என்ற வார்த்தையைக் கேட்டாலே ஆன்மிகத் தேடுதல் இல்லாத அனைவரும் ஒதுங்கி விடுகிறார்கள்.

உண்மையில் அன்றாட வாழ்வில் பிரச்சினையை எதிர்கொண்டுவரும் நம் அனைவருக்குமே ஞானம் மிகவும் அவசியமானது. ஞானம் என்பது மனதைப் பற்றிய ஓர் அறிவியல். ஒவ்வொரு மனிதரும் அவரவர் மனதின் மூலமாகத்தான் உலகத்தையே புரிந்து கொண்டும் வாழ்ந்து கொண்டும் வருகிறார்கள். அப்படி இருக்கையில் மனதைப் பற்றிய அறிவு இல்லாமல் வாழும் வாழ்க்கை ஒரு போராட்டமாகவும் துன்பம் நிறைந்ததாகவும் தான் இருக்கும். அதனால்தான் ஞானம் என்பது ஆன்மிகத்தின் உயர்ந்த நிலையாக மட்டுமல்லாமல் ஒட்டு மொத்த மனித குலத்திற்கே தேவையான ஓர் உயர்ந்த அறிவாக உள்ளது. உயர்ந்த அறிவாக இருந்தாலும் அதை எளிமையாக்கி உளவியல் ரீதியான புரிதலாக ஸ்ரீ பகவத் ஐயா வழங்கி வருவதால் ஞானம் கூட அனைவரும் அடைந்து விடும் தகுதிக்கு வந்துவிட்டது.

ஞானம் மிகவும் எளிமையாக்கப்பட்டதன் காரணம் ஐயாவின் புதிய அணுகுமுறை என்றும் கூறலாம் அல்லது சரியான அணுகுமுறை என்றும் கூறலாம். ஏனெனில் இதுவரை வந்த ஞானிகள் எவரும் இந்த அணுகுமுறையில் விளக்கவில்லை.

ஐயா வழங்கும் மனதைப் பற்றிய புரிதலை திறந்த மனதுடன் ஆராய்ந்தால் ஒரே நாளில் மெய்ஞானத் தெளிவு பெற்றுவிட முடியும். அப்படி பெற்று பயன்பெற்றவர்கள் தான் நாம் அனைவரும்.

பயன் பெற்றவர்கள் அனைவரும் தம்வேலை முடிந்து விட்டதென்று அவரவர் வேலையை மட்டுமே பார்த்துக் கொண்டு இருந்தால் அது சரியாகாது. பகவத் ஐயா அவர்களின் அன்பும் கருணையும்தான் நாம் மெய்ஞானத் தெளிவு பெற உதவியது. நாம் பெற்ற தெளிவை உலகிற்கு எடுத்துச் செல்வது நமது கடமையாக கருதவேண்டும். இந்தப் பணியைத் தான் நாம் செய்து வருகிறோம். பல சத்சங்கங்கள், ஞான முகாம்கள் நடத்தி வருகிறோம். இதில் இணைந்தவர்கள் அனைவரையும் ஒரு குடும்பமாக கருதி வருகிறோம்.

தற்கால சூழ்நிலையில் சிறியவர்கள், பெரியவர்கள் என எல்லோருமே ஏதோ ஒரு வகையில் மன உளைச்சலுக்கும் மன அழுத்தத்திற்கும் ஆளாகி வருகிறார்கள். இவைகளே மன நோய்களுக்கும் உடல்ரீதியான பல நோய்களுக்கும் காரணமாகிவிடுகிறது. எனவே அனைவருமே இப்புரிதலை பெறுவது அத்தியாவசியமான ஒன்றாகிவிட்டது. அவர்களுக்கு எடுத்துச் செல்வது நம் அனைவரின் கடமையும் ஆகும்.

அதன் முயற்சியாக சென்னையில் மாபெரும் ஒரு நாள் ஞான முகாம் ஒன்றை சென்னை காமராஜர் அரங்கில் செப்டம்பர் 2ம் தேதி நடத்த ஏற்பாடு செய்துள்ளோம். நமது இந்த முயற்சி வெற்றிபெற வேண்டுமென்றால் பாதையில் பயணிக்கும் நாம் அனைவரும் கலந்து கொள்வதோடு ஒவ்வொருவரும் குறைந்த பட்சம் தேடுதல் கொண்ட இரண்டு அன்பர்களையாவது கலந்து கொள்ள செய்ய வேண்டும்.

இது யாருக்கோ எழுதப்பட்டதன்று, படித்துக் கொண்டிருக்கும் உங்களுக்காக எழுதப்பட்டது. உங்கள் ஒவ்வொருவரின் முயற்சியும்தான் ஞானம் என்ற புரிதலை ஆயிரக்கணக்கானவர்களுக்கு எடுத்துச் செல்ல பேருதவியாக அமையும்.

எனவே தாங்கள் அவசியம் கலந்து கொள்வதோடு மற்றவர்களையும் கலந்து கொள்ள செய்து பயன்பெற செய்யுமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ பகவத் பவனில் ஐயாவுடன் நமது அன்பர் செந்தில் குடும்பத்தினர்



நிஷ்டையில் நடைபெற்ற ஞான முகாமில் கலந்து கொண்டவர்கள்



சூரியோதயத்தின் முன்
ஞானோதயம்



மாலை நேர நடைபயிற்சியில்
அய்யாவுடன் அன்பர்கள்



இரவு உணவுக்கு பின்னர்
சற்று ஓய்வின் போது



இளந்தளிரும்
இளகிய மனமும்



Online சத்சங்கத்தில்

# ஸ்ரீ பகவத் ஐயாவின் நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| ஜூலை 3 முதல் 11ம் தேதி வரை | - | **சென்னை** |
| ஜூலை 8ம் தேதி ஞாயிறு | - | "**பகவத் பயணம்**" புதிய நூல் வெளியீடு |
| இடம் | - | **ஸ்ரீபகவத் மிஷன்,** சென்னை மையம், வெஸ்ட் மாம்பலம், சென்னை. செல் : **94444 02986, 93810 19473** |
| ஜூலை 17 முதல் ஆகஸ்ட் 25 வரை | - | **சேலம்** |
| ஜூலை 13, 14, 15 முதல் | - | **ஞான முகாம்** |
| இடம் | - | **ஸ்ரீ பகவத் மிஷன்,** செல் : **97891 65555, 99942 05880** |

# பாதையில் மலர்ந்த மலர்
# "குருவால் கூடிய குரு"

2006 மார்ச் 28ம் நாள் அருள்தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்கள் முக்தி அடைந்தார். அப்பொழுது நான் வேண்டி கொண்டேன். இன்னமும் எனக்கு தெளிவு வேண்டும். நீங்கள் தான் வழி காட்ட வேண்டும், வாழும் குரு வேண்டும்.

1999 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் தீட்சை பெற்றேன். ஆன்மீகம் பயணம் தொடர்ந்தது. (1977ம் வருடம் விவேகானந்தர் பாறையில் தொடங்கிய பயணம்)

'மனதை அடக்க நினைத்தால் அலையும்

அறிய நினைத்தால் அடங்கும்.'

'சிந்தையை அடங்கி ஆள வேண்டும்' என்பர் மகரிஷி.

பிரம்ம ஞான பயிற்சியை அளித்தவுடன், அருள் தந்தை வேதாத்திரி மகரிஷி அவர்கள் கூறியது "நானும் பிரம்ம ஞானி, நீங்களும் பிரம்ம ஞானி" என்று.

2011 ம் ஆண்டு நவம்பர் மாதம் எனக்கு கிடைத்த பகவத் பாதையை படித்தவுடன் அருள்தந்தை அவர்கள் எனக்கு வாழும் குருவை காட்டியதை உணர்ந்தேன். (Think & Thought)

2004 ம் ஆண்டு (மனதின் தனித்தன்மையை, தனி இயக்கத்தை உணர்ந்தேன்) பெற்ற ஞானத்தை, ஸ்ரீ பகவத் ஐயா திருக்கரங்களால் பெற்ற நூலை படித்தபோது, உறுதிப்படுத்திக் கொண்டேன்.

அருள்தந்தை அவர்களுடன் பேசிக் கொண்டிருந்த போது கூறியது, "வரும் காலத்தில் ஆன்மிகம் மேலும் எளிமை படுத்தப்படலாம்", என்பதை ஸ்ரீபகவத் ஐயாவை சந்தித்த மாத்திரத்தில் உணர்ந்தேன்.

சென்னையில் நித்தியானந்தா தெருவில் ஐயாவை சந்திக்க சென்றபோது வீட்டு வராண்டாவில் ஐயா எழுதிய நூல்கள் பல இருந்தன. அவற்றுள் ஒன்று என் மனதை பதறவைத்தது, தியானத்தை விடு, ஞானத்தை பெறு என்ற தலைப்பு. (அப்போது தியானத்தில் மிகுந்த பற்றுள்ளவன்)

ஐயா சந்திப்பு நிறைவு பெற்று புறப்படும் போது நான் எந்த புத்தகம் படிக்கலாம் என்று கேட்டவுடன் ஐயா திருக்கரங்களால் எடுத்து அருளிய புத்தகம் இரண்டு. அதில் ஒன்று "தியானத்தை விடு ஞானத்தைப் பெறு" மற்றொன்று "ஞான விடுதலை".

"ஞானியரை வணங்குவதை விட நீங்களே

ஞானியராய் மலருங்கள்"

என்ற வாசகம் ஒன்றே போதும் ஸ்ரீ பகவத் ஐயாவின் எளிமைக்கு சான்று.

தியானம் "புற உலக வாழ்க்கையை செம்மையாக செயல்படுத்த பயன்படும்" என்பதையும், ஞானம் "அகத்தை சுதந்திரமாகவும், இயல்பாகவும் இருக்க உதவும்" என்பதையும் தெளிவு படுத்தியவரே ஸ்ரீ பகவத் ஐயா. 'அகத்தளவில் ஞானியாகவும், புறத்தளவில் யோகியாகவும் உள்ள ஒருவனே பூரண மனிதன்' என்பார் ஐயா.

சில ஏன் பல அன்பர்கள் ஐயாவின் சத்சங்கத்தில் கலந்து கொண்டால் மதம் மாறிவிடுவது போன்ற எண்ணத்தை வைத்துக் கொண்டிருந்தால் எதை சாதிக்க போகிறார்கள்.

பசி என்ற உணர்வு, மதம், மொழி, இனம் அனைத்தையும் கடந்த உணர்வு (அதே போன்று தான் ஞானம்)

இயற்கையின் பிரவாகத்தை புரிந்து கொள்வதே "ஞானம்". இயற்கையை விட எளிமையானது எதுவுமில்லை. இயற்கையைவிட சிறப்பானது எதுவுமில்லை.

ஞானத்தை சிறப்பாகவும் எளிமையாகவும் தரும் ஸ்ரீ பகவத் ஐயாவை அருளிய இயற்கைக்கு மனமார்ந்த வாழ்த்துக்கள். நன்றி.

**A.N. செ. இரவிச்சந்தர், 94437 29525**

# ஞான உறுதி முகாம்



ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

அடைவதற்கு அரிதான மெய் ஞானத்தை ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் அறிவியல் ரீதியாக வழங்கி வருவதால் ஞானம் பெறுவது மிகவும் எளிதாகிவிட்டது. ஞானம் பெற பல முயற்சி பயிற்சிகளை செய்து வந்தவர்கள் பலருக்கும் இந்த எளிமையே தடையாகவும் ஆகிவிடுகிறது. எளிமையாக இருப்பதால் இதை தவறவிட்டு விட்டு மீண்டும் தேட ஆரம்பித்துவிடுகிறார்கள்.

அதனால்தான் ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் "**ஞானப்புரிதலை புரிந்துகொள்வது எவ்வளவு முக்கியமோ அதைவிட பலமடங்கு முக்கியமானது புரிந்து கொள்ள வேண்டியவற்றை புரிந்துகொண்டோம் என்று உறுதி செய்துகொள்வது**" என்று கூறுகிறார்.

ஐயா வழங்கும் ஞானப் புரிதல் என்ற உண்மை நமக்குள் வெறும் கருத்தாக பதிவதால் பயன் ஏதும் இல்லை. அந்தப் புரிதல் நம்மால் கண்டுபிடிக்கப்பட்ட உண்மையாக மாற வேண்டும். அப்போதுதான் அது நமக்கு விடுதலையைக் கொடுக்கும். நமக்கு பயன்படும்.

இதற்காக சிறப்பு ஞான உறுதி முகாம் (Enligletement Confirmation Camp) நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரியகவுண்டாபுரம், சேலம்-636 106.
நாள் : **12.10.2018 மாலை 6.00 மணிமுதல் 14.10.2018 மதியம் 3.00 மணிவரை**
செலவுப் பகிர்வு **ரூ. 3000/-** நபர் ஒருவருக்கு

**இந்த சிறப்பு ஞான முகாமில் கலந்து கொள்வதற்கான தகுதிகள் :**

1. ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்களில் குறைந்தபட்சம் 2ல் கலந்திருக்க வேண்டும்.
1. **ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** என்ற நூலினை படித்திருக்க வேண்டும்.

**மேற்கண்ட நிபந்தனைக்கான காரணம் :**

பொது கூட்டங்களிலும் முதல் முறையாக ஞானமுகாமில் பங்குபெறுவர்களிடமும் பகிர்ந்துகொள்ள முடியாத பல விசயங்களையும் நடைமுறை யதார்த்த உண்மைகளையும் இந்த சிறப்பு ஞான முகாமில் பகிர்ந்து கொள்ளப் போகிறோம். இவை மேற்குறிப்பிட்ட தகுதியானவர்களுக்கு ஞானத்தை உறுதி படுத்துவதற்கும், தேடுதலை நிறைவு செய்து விடுதலை பெறுவதற்கும் பேருதவியாக இருக்கும். புதிய அன்பர்களுக்கு குழப்பத்தை ஏற்படுத்திவிடும் என்பதால் தவிர்க்கிறோம். அதனால் இந்நிகழ்ச்சியை **Youtube** லும் வெளியிட மாட்டோம் என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

30 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள முடியும். முன்பதிவு அவசியம்.

## முன்பதிவு செய்யும் வழிகள்

M.O, D.D. (or) Cheque : வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

Direct Payment : நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.
**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075,**
**NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem**

**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : 9994205880, 97891 65555

## விண்ணப்பம்

ஐயா, அக்டோபர் மாதம் 12, 13, 14 தேதிகளில் நடைபெறும் ஞான உறுதி முகாம் கலந்து கொள்ள விரும்புகிறேன்.

பெயர் : ..........................................................

முகவரி : ..........................................................

..........................................................

செல் : ..........................................................

ஏற்கனவே கலந்து கொண்ட இரண்டு ஞான முகாம் விபரம் ;

| ஞான முகாம் நடைபெற்ற நாள் | ஞான முகாம் நடைபெற்ற இடம் |
|---|---|
| 1. | |
| 2. | |

'ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்' எனும் நூலினை படித்துவிட்டேன் என உறுதி அளிக்கிறேன்.

இப்படிக்கு



# ஜென் கதை

## "பிரேக்கைப் பிடி"



இளைஞன் ஒருவன் தனக்கு ஏற்படும் எதிர்மறை எண்ணங்கள், தன்னுடைய முன்னேற்றத்திற்கு பெரும் தடையாக இருப்பதாக உணர்ந்தான். எதிர்மறை எண்ணங்களில் இருந்து விடுபடுவதற்கு பல வழிகளிலும் முயன்றான். எந்த மாற்றமும் ஏற்படவில்லை. வேறு வழித் தெரியாமல் வெகுத்தொலைவில் இருக்கும் ஜென் மடாலயத்தில் உள்ள ஞானியைத் சந்தித்து தன்னுடைய பிரச்சினைக்கு தீர்வு கேட்டான்.

ஞானி அவனிடம், "என்னை சந்திக்க நீ எதில் பயணம் மேற்கொண்டாய்" என்றார்.

அவரை சந்திக்க ஓர் இரண்டு சக்கர மோட்டார் பைக்கில் வந்ததாக தெரிவித்தான் இளைஞன்.

ஞானி அவனது வண்டியில் இருந்த பிரேக்கை கழட்டி வைத்துவிட்டு, ஒரு 5 கி.மீ. பயணம் செய்து திரும்பி வரச் சொன்னார்.

இளைஞன் இவர் செய்கையைப் பார்த்து, "இவர் ஞானிதானா? இல்லை பைத்தியமா? இப்படி நடந்து கொள்கிறாரே" என்று எண்ணினான்.

வேறு வழிதெரியாமல் அவர் சொன்னதை செய்யும் சூழ்நிலையில் இருந்ததால் வண்டியை எடுத்துக் கொண்டு மிகவும் நிதானமாக ஓட்டிச் சென்றான். நிதானமாக ஓட்டியும் பிரேக் இல்லாததால் ஒரு குழியில் விழுந்து பிறகு எழுந்து மெதுவாக ஞானியின் இருப்பிடம் வருவதற்கு ஒரு மணி நேரத்திற்கு மேல் ஆகிவிட்டது. பைக்கை நிறுத்துவதற்குள் படாதபாடு பட்டு நிறுத்தினான் இளைஞன்.

ஞானி அவனிடம், "5 கி.மீ. போய் வருவதற்கு இவ்வளவு நேரமா? பைக் பயணம் எப்படி இருந்தது? இனிமையாக இருந்ததா?" எனக் கேட்டார்.

"ரொம்ப சிரமப்பட்டேன் சுவாமி, நீங்க பிரேக் வேற கழற்றிவிட்டுடிங்க. பிரேக் இருந்திருந்தா 5 கி.மீ தூரத்தை வெறும் 10 நிமிடத்தில் போய் வந்திருப்பேன். இப்ப ஒரு மணி நேரம் ஆனது கூட பரவாயில்லை, எப்போது என்ன நிகழுமோ, எங்கேயாவது பிரேக் இல்லாமல் விழுந்துவிடுவோமோ என்று பயந்துகொண்டே ஓட்ட வேண்டியதாக இருந்தது" என்றான் இளைஞன்.

"இதுதானாப்பா உனது பிரச்சினையும்" என்றார் ஞானி.

"ஒன்றும் புரியவில்லை சுவாமி" என்றான் இளைஞன்.

"ஒரு வண்டிக்கு ஆக்ஸ்லேட்டர் எப்படி முக்கியமோ அப்படித்தான் பிரேக்கும் முக்கியம். இரண்டும் இருந்தால்தான் பயணம் பாதுகாப்பா இருக்கும். ஆக்ஸ்லேட்டர் மட்டும் இருந்தால் நம்மால் பாதுகாப்பாக ஓட்ட முடியுமா?" என்றார் ஞானி.

"நிச்சயமாக ஓட்ட முடியாது" என்றான் இளைஞன்.

"அப்படித்தான் எதிர்மறை எண்ணங்களும் நம்முடைய உதவிக்குதான் வருகிறது" என்றார் ஞானி.

புரிந்த மாதிரி இருக்கு சாமி இன்னும் கொஞ்சம் நல்லா விளக்குங்க சாமி" என்றான் இளைஞன்.

"வாழ்க்கை என்ற பயணத்தை மனசு என்ற வண்டியை வச்சுதான் ஓட்டியாகவேண்டும். அப்படி ஓட்டுவதற்கு நேர்மறை எண்ணம் என்ற ஆக்ஸ்லேட்டரும் வேண்டும். எதிர்மறை எண்ணம் என்ற பிரேக்கும் வேண்டும். தேவையான இடத்துல தேவையானதை பயன்படுத்தினால் வாழ்க்கை என்ற பயணம் பாதுகாப்பாகவும் இனிமையாகவும் இருக்கும்" என்றார் ஞானி.

"சுவாமி நீங்கள் சொல்வது ரொம்ப நல்லா புரியுது. பிரேக் எப்படி நமக்கு பாதுகாப்பாக இருக்குதோ அப்படி எதிர்மறை எண்ணங்கள் நமக்கு நிதானத்தை கொடுக்குது. ஆனால் பல நேரத்தில் தேவையற்ற எதிர்மறை எண்ணங்கள் வருதே. ஒரு இடத்துல எந்தப் பிரச்சினையும் இல்லன்னு தெரியுது. இருந்தாலும் எதாவது தவறா நடந்துவிடுமோனு பயம் வருது. இதனால என் முன்னேற்றம்தான் பாதிக்குது. இதற்கு என்ன செய்வது சுவாமி? " என்றான் இளைஞன்.

"வண்டியில எப்பவும் பிரேக்கும் ஆக்ஸ்லேட்டரும் இருந்துகிட்டுதான் இருக்கும். ரோடு ஃபிரியா (Free) இருந்தால் பிரேக் பிடிக்கத் தேவையில்லை. வண்டில பிரேக் இருக்குதுனு அதை பிடிச்சுகிட்டே இருக்க தேவையில்லை. தேவைப்படும்போது பிடிச்சா போதும்" என்றார் ஞானி.

"எதிர்மறை எண்ணமும் அப்படிதானா சுவாமி?" என்றான் இளைஞன்.

"ஆமாம், வண்டி என்றாலே பிரேக்கும் ஆக்ஸ்லேட்டரும் இருந்தாதான் அது முழுமையான வண்டி. அதுமாதிரி எல்லா எண்ணங்களும் உணர்வுகளும் வந்துபோனாதான் அது ஆரோக்கியமான மனசு. எதிர்மறை எண்ணங்களையும் தேவையென்றால் நிதானமாக செயல்படுவதற்கு பிரேக் மாதிரி பயன்படுத்திக் கொள்ளலாம். தேவையில்லை என்றால் விட்டுவிட்டால் போதும் அதை பிடிங்கிபோட தேவையில்லை" என்றார் ஞானி.

"நன்றாக விளங்கிக்கொண்டேன் சுவாமி, ரொம்ப நன்றி" என்று கூறிவிட்டு வண்டிக்கு பிரேக்கை எடுத்து பொருத்திக் கொண்டு பாதுகாப்பாகவும் விரைவாகவும் வீடுபோய் சேர்ந்தான் இளைஞன்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555